

# திருவைந்தெழுத்து

திருவைந்தெழுத்து என்பது *<u>தூலம், சூக்குமம், காரண, மகாகாரண, மகாமணு</u>* என ஐந்து வகைப்படும்.

‘ந’கரத்தை முதலாக உடையது.

(நமசிவாய) தூலம். ‘சி’கரத்தை முதலாக உடையது (சிவாயநம) சூக்குமம்.

அதிசூக்குமம் ‘ந’கர ‘ம’கரங்களின்றிச் சிகரத்தை முதலாகவுடையது (சிவாய). இங்குத் தூலவைந் தெழுத்துக் குறிப்பிடப்பட்டுள்ளது. இது, உயிர்களுக்கு உலக இன்பத்தைக் கொடுத்துப் பக்குவப்படுத்துவது. இம்மந்திரத்தின் வகைகளை ஐந்தாகக் கூறுவர்.

| | |
|---|---|
| **தூல பஞ்சாட்சரம்** | **– நமசிவாய** |
| **சூக்கும பஞ்சாட்சரம்** | **– சிவாயநம** |
| **காரண பஞ்சாட்சரம்** | **– சிவயசிவ** |
| **மகாகாரண பஞ்சாட்சரம்** | **– சிவசிவ** |
| **மகாமணு பஞ்சாட்சரம்** | **– சி** |

## தூல பஞ்சாட்சரம் —நமசிவாய

**நமசிவாய** என்னும் திருவைந்தெழுத்து சிவபெருமானின் முதல் திருமேனியாகும். மந்திர வடிவான இறைவனின் திருமேனியில்-

திருவடி – ந

திருஉந்தி – ம

திருத்தோள்கள் – சி

திருமுகம் – வா

திருமுடி – ய

இத்தூல மந்திரம் உலக இன்பங்களைத் தந்து இம்மை நலம் அருளக்கூடியது. இதுவே ஞானமார்க்கத்தின் முதல் படி. ஆகவேதான் சமயக்குறவர்கள் இம்மந்திரத்தைப் போற்றி ஜெபித்தனர்.

## சூக்கும பஞ்சாட்சரம் —சிவாயநம

**சிவாயநம** என்னும் அட்சரம் சிவனிருக்கும் அட்சரம் என சிவவாக்கியர் குறிப்பிட்டுள்ளார். இம்மந்திரம் இம்மை-மறுமைப் பயன்களை அளிக்கவல்லது. மாணிக்கவாசகப் பெருந்தகை இம்மந்திரத்தை தவமிருந்து பெற்றார் என்பர். உலக இன்பங்களைத் தருவதோடு விரும்பும் காலத்தில் திருவடிப் பேற்றையும் அளிக்கவல்லது.

நடராஜமூர்த்தியின் ஞான நடனத்திருக்கூத்தே சூக்கும பஞ்சாட்சரத் திருமேனியாகும்.

சி -உடுக்கை ஏந்திய வலக்கரம்.

வா – தூக்கிய திருவடியைச் சுட்டும் இடதுகரம்.

ய – அஞ்சேல் என்றருளும் வலது அபயகரம்.

ந – அனலேந்திய இடக்கரம்.

ம – முயலகனின்மேல் ஊன்றிய திருவடி.

உலகப்பற்றை அறவே ஒழித்து திருவடிப்பேற்றை விரும்பும் ஆன்மாக்களுக்காக நிகழ்த்தப்பெறும் ஞானத்திருநடனம் இது. இதுவே ஞான மார்க்கத்தின் இரண்டாவது படி.

## காரண பஞ்சாட்சரம் —சிவ_ய_சிவ

**ய** என்பது உயிரைக் குறிப்பது உயிராகிய ய வுக்கு இருபுறமும் சிவசக்தி காப்பாக இருப்பதால், இம்மந்திரத்தை *இதய மாணிக்க மந்திரம்* என்பர்.

உலகப்பற்றை அறவே ஒழித்து திருவடிப்பேற்றிலே மூழ்கியிருக்கும் தவசீலர்கள், இம்மந்திரத்தை ஜெபிப்பதன் மூலம் இவ்வுடம்போடு கூடிய நிலையில் இவ்வுலகிலேயே பேரின்பத்தைப் பெறுவர்.

## மகாகாரண பஞ்சாட்சரம் —சிவசிவ

சிவசக்திக்குள்ளே _**ய**_ கரமாகிய உயிர் ஒடுங்கியுள்ளது.

சிவ சிவ என்கிலர் தீவினையாளர்

சிவ சிவ என்றிடத் தீவினைமாளும்

சிவ சிவ என்றிடத் தேவருமாவர்

சிவ சிவ என்னச் சிவகதிதானே

என இம்மந்திரத்தின் மகிமையை திருமூலர் சிறப்பித்துக் கூறுகிறார்.

சிவ சிவ மந்திரத்தை தினமும் ஜெபிப்பவர் சிவனும் தானும் பிரிவில்லாத நிலையான மேலான பேரின்பத்தைப் பெற்று விரைவில் உன்னத முக்தி நிலை பெறுவர்.

## மகாமனு பஞ்சாட்சரம் —சி

**சி** என்பது மகாமனு பஞ்சாட்சர மந்திரம். **சி** என்ற ஓரெழுத்தில் **வ** என்னும் அருள் சக்தியும் **ய** என்னும் உயிரும் **ந** என்னும் மறைப்பாற்றலும் **ம** என்னும் மலங்களும் ஒடுங்கியுள்ளன. *இது ஒரெழுத்து மந்திரமானாலும், இதில் திருவைந்தெழுத்துக்களும் அடக்கம்.*

ஆடும் படிகேள்நல் லம்பலத்தான் ஐயனே

நாடுந் திருவடியி லேநகரம் - கூடும்

மகரம் உதரம் வளர்தோள் சிகரம்

பகருமுகம் வாமுடியப் பார் (உண்மை விளக்கம்)

நாயோட்டு மந்திரம் நான்மறை வேதம்

நாயோட்டு மந்திரம் நாத னிருப்பிடம்

நாயோட்டு மந்திரம் நாதாந்த சோதி

நாயோட்டு மந்திரம் நாமறி யோமன்றே

-திருமந்திரம்-

நயப்பது நாய். நயக்கப்படுவோன் நாயன். நாயானது உயர்ந்த பண்பை உடையது. அவை தலைவனை அறிதல், தலைவன் உடைமையை உயிரினும் சிறப்பாக ஓம்புதல், தலைவன் துன்புறுத்தினும் இன்புறுத்தல், தலைவன் ஏவிய வழிநிற்றல், நன்றி மறவாமை, தலைவன் பொருட்டுத் தன்னுயிரையும் கொடுத்தல், மோப்பம் உணர்தல் முதலிய பலவாம். அத்தகைய நாய் மறந்து பிறரில் புகுமேல் அதனை ஓட்டுதற் பொருட்டு இகழ்ச்சிக் குறிப்பாகச் சொல்லும் சொல். 'சீ' என்பதாகும்.

இதனையே நாயோட்டு மந்திரம் என நவின்றனர். பழங்காலத்துப் பொதுவாக மந்திரங்களை உய்த்துணருமாறு மாத்திரைகளைக் கூட்டியும் குறைத்தும் ஓதுவாராயினர். அம் முறையில் ஈண்டுச் சிகரத்தைச் சீ என மாத்திரை கூட்டி ஓதுவாராயினர். எனவே நாயோட்டு மந்திரமாகிய சிகரத்தின்கண் நான்மறைவேதங்கள் அடங்கும். அச் சிகரமே நாதன் இருப்பிடமாகும். அச் சிகரமே அருஞ்சைவர் மெய் ஆறாறுக்கு அப்பாலுள்ள இயற்கை உண்மை அறிவின்பப் பேரொளியாகும். இவ்வுண்மையை அல்லாமல் வெளிப்படையாகக் கூறும் 'சீ' என்பதே நாயோட்டு மந்திரம் எனக்கொண்டு பொருள் காணலுறின் அப்பொருளை நாமறியோம் என்க.

நாயோட்டு மந்திரம் - சி.

**இவ்வளவு சிறப்பு மிக்க _திருவைந்தெழுத்தை சித்தர்களும், நாயன்மார்களும் சொல்லிய வண்ணம் பொருள் உணர்ந்து சொல்லுவதே உகந்தது. இதுவே சைவநெறி._**

**சிவாயநம**

**திருச்சிற்றம்பலம்**

# எல்லாம் ஐந்து தான் எம்பெருமானுக்கு:-

1.பஞ்ச பூதங்கள்:-

நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம்

2. பஞ்சாட்சரம் ஐந்து:-

| | |
|---|---|
| தூல பஞ்சாட்சரம் | – நமசிவாய |
| சூக்கும பஞ்சாட்சரம் | – சிவாயநம |
| காரண பஞ்சாட்சரம் | – சிவயசிவ |
| மகாகாரண பஞ்சாட்சரம் | – சிவசிவ |
| மகாமணு பஞ்சாட்சரம் | – சி |

3). சிவமூர்த்தங்கள்:-

| | |
|---|---|
| 1.பைரவர் | -வக்கிர மூர்த்தி |
| 2.தட்சிணாமூர்த்தி | -சாந்த மூர்த்தி |
| 3.பிச்சாடனர் | -வசீகர மூர்த்தி |
| 4.நடராசர் | -ஆனந்த மூர்த்தி |
| 5.சோமாஸ்கந்தர் | - கருணா மூர்த்தி |

4). பஞ்சலிங்க சேத்திரங்கள்:-

| | |
|---|---|
| 1.முக்திலிங்கம் | -கேதாரம் |
| 2.வரலிங்கம் | -நேபாளம் |
| 3.போகலிங்கம் | -சிருங்கேரி |
| 4.ஏகலிங்கம் | -காஞ்சி |
| 5.மோட்சலிங்கம் | -சிதம்பரம் |

5). பஞ்சவனதலங்கள்:-

| | |
|---|---|
| 1.முல்லை வனம் | -திருக்கருகாவூர் |
| 2.பாதிரி வனம் | -அவளிவணல்லூர் |
| 3.வன்னிவனம் | -அரதைபெரும்பாழி |
| 4.பூளை வனம் | -திருஇரும்பூளை |
| 5.வில்வ வனம் | -திருக்கொள்ளம்புதூர் |

6). பஞ்ச ஆரண்ய தலங்கள்:-

1.இலந்தைக்காடு -திருவெண்பாக்கம்

2.மூங்கில் காடு -திருப்பாசூர்

3.ஈக்காடு -திருவேப்பூர்

4.ஆலங்காடு -திருவாலங்காடு

5.தர்ப்பைக்காடு -திருவிற்குடி

7). பஞ்ச சபைகள்:-

1.திருவாலங்காடு -இரத்தின சபை

2.சிதம்பரம் -பொன் சபை

3.மதுரை -வெள்ளி சபை

4.திருநெல்வேலி -தாமிர சபை

5.திருக்குற்றாலம் -சித்திர சபை

8). ஐந்து முகங்கள்:-

1.ஈசானம் - மேல் நோக்கி

2.தத்புருடம் -கிழக்கு

3.அகோரம் -தெற்கு

4.வாம தேவம் -வடக்கு

5.சத்யோசாதம் -மேற்கு

9). ஐந்தொழில்கள்:-

1.படைத்தல்

2.காத்தல்

3.அழித்தல்

4.மறைத்தல்

5.அருளல்

10). ஐந்து தாண்டவங்கள்:-

1.காளிகா தாண்டவம் 2.சந்தியா தாண்டவம்

3.திரிபுரத் தாண்டவம் 4.ஊர்த்துவ தாண்டவம்

5.ஆனந்த தாண்டவம்

11). பஞ்சபூத தலங்கள்:-

1.நிலம் - திருக்கச்சியேகம்பம் (காஞ்சிபுரம்) & திருவாரூர்

2.நீர் -திருவானைக்கா

3.நெருப்பு -திருவண்ணாமலை

4.காற்று -திருக்காளத்தி

5.ஆகாயம் -தில்லை

12). இறைவனும் பஞ்சபூதமும்:-

1.நிலம் - 5 வகை பண்புகளையுடையது

(மணம் ,சுவை ,ஒளி ,ஊறு ,ஓசை )

2.நீர் - 4 வகை பண்புகளையுடையது

(சுவை ,ஒளி ,ஊறு ,ஓசை )

3.நெருப்பு - 3 வகை பண்புகளையுடையது

(ஒளி ,ஊறு ,ஓசை )

4.காற்று - 2 வகை பண்புகளையுடையது

(ஊறு ,ஓசை )

5.ஆகாயம் - 1 வகை பண்புகளையுடையது

(ஓசை )

13). ஆன் ஐந்து:-

பால் ,தயிர் ,நெய் ,கோமியம், கோசலம்

14). ஐங்கலைகள்:-

1.நிவர்த்தி கலை

2.பிரதிட்டை கலை

3.வித்தை கலை

4.சாந்தி கலை

5.சாந்தி அதீத கலை

15). பஞ்ச வில்வம்:-

1.நொச்சி

2.விளா

3.வில்வம்

4.கிளுவை

5.மாவிலங்கம்

16). ஐந்து நிறங்கள்:-

| | | |
|---|---|---|
| 1.ஈசானம் | - மேல் நோக்கி | - பளிங்கு நிறம் |
| 2.தத்புருடம் | -கிழக்கு | - பொன் நிறம் |
| 3.அகோரம் | -தெற்கு | - கருமை நிறம் |
| 4.வாம தேவம் | -வடக்கு | - சிவப்பு நிறம் |
| 5.சத்யோசாதம் | -மேற்கு | - வெண்மை நிறம் |

17). பஞ்ச புராணம் :-

1.தேவாரம்

2.திருவாசகம்

3.திருவிசைப்பா

4.திருப்பல்லாண்டு

5.பெரியபுராணம்

18). இறைவன் விரும்ப நாம் செய்யும் ஐந்து:-

1.திருநீறு பூசுதல்

2.உருத்ராட்சம் அணிதல்

3.பஞ்சாட்சரம் ஜெபித்தல்

4.வில்வ அர்ச்சனை புரிதல்

5.திருமுறை ஓதுதல்

19). பஞ்சோபசாரம் :-

1.சந்தனமிடல்

2.மலர் தூவி அர்ச்சித்தல்

3.தூபமிடல்

4.தீபமிடல்

5.அமுதூட்ட.

**சிவாயநம**

**திருச்சிற்றம்பலம்**

**r.manmathan@gmail.com**

